# குரு நானக்

| எண் | பொருளடக்கம் |
|---|---|
| 1 | அம்மான் ஜெயராஜ் |
| 2 | குரு நானக் |
| 3 | இசை ஞானி |
| 4 | இசை மேதை |
| 5 | கலா இரசிகன்-இசைப் பிரியன் |

# அம்மான் ஜெயராஜ்

எம் விழியிரண்டில் நீர்க்கோலம்
இளநெஞ்சுக்குள் சோகப் புயலின் ஆர்ப்பாட்டம்
வாழ்வில் கண்ணீர் மழைக் காலம்-எங்கள் வசந்தம்
மறைந்ததே என மனசுக்குள் மாறாத சோகம்




அம்மான் மடிந்து விட்டார்
இடியாய் வந்து சேதி-இள
நெஞ்சங்களை புயலாய்த் தாக்கி,
புழுதியில் எறிந்த மரண பீதி




அக்கை மீது பாசமலரான பாசம்
தந்தையை இழந்த எம்மீது
தந்தை உறவான நேசம், மடியும் வரை
எம் வாழ்வில் நீங்காத கரிசனம்

தந்தை இறந்த பிறகு- தந்தையாய் மாறிய
எம் தாய்க்குப் பிரியமான தம்பி,
எம்மை காணவரும்போதெல்லாம்
கைநிறைய காசு தந்து நேசித்த சோதி

எம் படிப்பில் அக்கறை, படி படி
என ஊக்குவித்த அன்புறவு, என் பரீட்வை
பேறுபேற்றை வேலை வங்கியில் சமர்பித்த
பாசத்தின் பேரழகாய் அன்புத் தந்தை



என் அக்கையின் படிப்பில் அக்கறை
வேலை வாங்கித் தந்த தந்தை
திருமணத்திலும் தந்தையாய் முன்னின்ற புனிதர்,
எம் வாழ்வில் ஒருபோதும் மறக்கமுடியாத அன்பர்

அக்கையின் மீது அளவில்லா நேசம்
கைபடப் பிசைந்து தரும் பிட்டும்
வாழைப் பழமும் உண்டு சுவைத்து
எங்களில் ஒருவனாய் குதுாகலித்த பாசம்

அன்பைக் குழைந்து அக்காச்சி என்றழைக்கும்
தம்பி, அக்கை முகத்தில் புன்னகையோ பௌர்ணமி
தமபி விரும்பிய அழகியை தாரமாய் சேர்த்து
மனங்குளிர்ந்த அக்கா தம்பி உறவு
அணையாச் சுடரான அன்பு, வாழ்வோ அழகிய கனவு

உறவுகள் உதிரும்போது நெஞ்சுக்குள்
வடியும் உதிரம், அன்பை இழந்த இதயம்
அநாதைபோல் தவிக்க- ஒரு நாள்
கலையும் வாழ்வு இன்பக் கனவோ இறைவா?

இன்பமே சூழ்க-எல்லோரும்
நலமே வாழ்க
எல்லாப் புகழும் இறைவனுக்கே
Pax Ravichandra-10-12-2024

# குரு நானக்



பஞ்சாபி மொழி மட்டும் அறிந்த குரு நானக்
மகத்தான பாடகர் இசை மேதை, சீடன் மர்தானா
இசை மீட்க, கேட்போரைக் காந்தமாய்க்
கவர்ந்திழுக்கும் குருவின் பாடலோ தேவகீதை



பாடலால் ஈர்ப்புண்ட மக்கள் கூடி வருவார்,
சுற்றி அமர்வார், இதயங்களை ஊடுருவும்
பாடல் அமைதி அருளும், கானமழையில் நீராடும்
உள்ளங்களில் ஆன்மீகத் தேடல் துளிர்க்கும்

குருவின் இருப்பே சத்சங்கமாகும்
இசையும் பாட்டும் நொந்த இதயங்களுக்கு
சுகமளிக்கும் ஆனந்த ஔடதமாகும்
மொழியின்றி அவர் உரை இசையானது
மோனம் தவமானது

நாடெங்கும் நடந்தே சுற்றித் திரிந்து
நல்நாதமாய் இசைபாடி, நோயுற்ற இதயங்களைக்
குணமாக்கும் ஆன்மீக வைத்தியன்
இனம், மதம், மொழி கடந்த சித்தன்

களைத்து ஓர் நாள் வரும் வழியில் கண்ட
சூபிக்களின் மடம், இராப்பொழுதை கழிக்க
எண்ணிய மனம், நீராடி தன் சேதியை
சூபிக்களின் தலைவருக்கு அனுப்பிய சற்குணம்



சேதி அறிந்த சூபியும் ஞானி,
மடமோ சூபிக்களால் நிறைந்துள்ளது
ஒருவர் தங்கவும் இடமில்லை-மறுத்துரைக்கவும்
மொழியில்லை, பரிபாஷை சேதியானது



கிண்ணம் நிறைந்த பாலோடு வந்த சீடன், பணிவோடு குரு
நானக்கிடம் நீட்டினார், பார்த்தவர் ஒரு கணம் தயங்கி,
மறுகணம் சிறிய காட்டுப் பூவை பாலில் போட்டு
குருவிடம் காட்டுங்கள் சைகையால் மொழிந்தார்

கிண்ணம் நிறைந்த வண்ணம் குலையாத பால்
வாழ்த்தோடு சேதி சொல்ல, எண்ணம் பிறவாமல்
சிறுபூவை பாலில் போட்டு, கொண்டு காட்டுங்கள்
திண்ணமாய் விழிகளால் மொழிந்தார் குரு நானக்

துளி கூடினாலும் பால் சிந்தும்
காற்றான மலர் களிப்போடு மிதக்க
அன்பின் ஊற்றான மனம் சொன்ன சேதி
உவகையை அளிக்கத், திறந்த கதவு



இல்லம் பால்போன்ற சூபிக்களால்
நிறைந்திருந்தாலும், என் இருப்பு பூப்போன்றது
பாரமற்றது, பாலைச் சிந்தாது, இராப்பொழுதைக்
கழிக்க ஓர் மூலை எமக்குப் போதும்

கதவு திறந்து குரு நானக்கின் பாதங்களைத் தொட்டு
நமஸ்கரித்து வரவேற்ற சூபி குரு, என் வரவு
சுமையல்ல குரு நானக்கின் பாவம், உம்மை
விருந்தோம்புவதோ இன்பச் சுமை சூபி குருவின் தாகம்

களிப்போடு கழித்த இதயங்களில் உவகையின் பேரவை,
ஆடலும், பாடலுமான மடமோ ஆன்மீகத் திருச்சபை
காலம் போனது தெரியாமல் நாட்கள் செல்ல
பிரியும் வேளையில் அழுது பிரிந்த அற்புத உறவு



இருந்த சில நாட்கள்- இசையோடு
பாடிய பாடல் இருப்போடு இணைக்க
ஆனந்தப் பாலமானது, மௌனத்தின் மொழி
ஆன்மீக பரிபாஷையானது

மௌனத்தில் நிலைத்த இருப்பு
மௌனமே மொழியான தொடர்பு
பூவான இருப்பு நறுமணம் வீச
இன்புற்ற சூபிக்களோ தேனீக்கள்



இளந்தென்றல் போல் தழுவிய இருப்பு
மனங்களுக்கு இதமானது
ஈர்ப்பை பகிர்ந்து களித்த தினங்களில்
அமைதியோ ஆனந்த விருந்தானது

ஆனந்த சற்சங்கமாய் அவர் இருப்பு-பாலில்
மிதக்கும் பூவாய் அவர் பரிணாமத்தின் சிறப்பு,
மொழியின்றி இருவரும் உரையாட மௌனமே
மொழியானது, இதயத்தின் மொழி இன்பமானது

வழியில் மார்தனா வினவினார்-குருவே எனக்குப்
புரியவில்லை, பாலின் இரகசியம், விளக்குங்கள்
இடமில்லை என்றவர்கள், இன்முகத்தோடு
விருந்தோம்பியது இதயத்தில் இனிக்கின்றது





கிண்ணம் நிறைந்த பால்போல் இம்மடம்
சூபிகளால் நிறைந்துள்ளது-ஒருவருக்கேனும்
இடமில்லை வேறு இடம் நாடிச் செல்லுங்கள்
இதுவே சூபி குரு சொன்ன சேதி

சின்னஞ் சிறிய காட்டுப் பூவாய் எம்மிருப்பு
பால் சிந்தாது, உங்களுக்கு துன்பம் நேராது,
மிதக்கும் பூவாய் எம் இருப்பு

பரிவோடு எம்மை ஏற்றுக்கொள்ளுங்கள்
என் பதிலானது, மொழி கடந்த புரிதல் இதமானது
உவகை பூத்த உறவாய் சூபிக்களின் வரவேற்பு
ஆனந்தமானது, மதம் கடந்த ஆன்மீகம் உறவானது

பிரியும் நாளும் வந்திடப், பிரிய மனமின்றி
ஆரத் தழுவி முத்தமிட்டு, ஆனந்தக் கண்ணீர் சொரிய
வாழ்த்தி விடைபெற்ற உறவு, மதம், மொழி
கடந்த ஆனந்த, ஆன்மீக உறவு

தேன் மலரைக் கண்டு தேனீ ஆடும்
ஆனந்த நடனம் வட்டமானது, இறையன்பை
தம்முள் கண்டு-சூபிக்கள் சுற்றிச் சற்றி
ஆடும் மனங்கழித்த நடனம் புனிதமானது



பாலால் சொன்ன சேதி மறுப்பானது
தேன் மலரால் சொன்ன சேதி இனிப்பானது
மனங்கழித்த மனிதர்கள் ஒன்று கூடல்
ஆனந்த நடனமானது

பிரபஞ்சமோ ஓயாத ஆனந்த தாண்டவம்
சுற்றிச் சுழன்றாடும் நடனமோ அகமுகப் பயணம்
ஆணவம் கழித்து, ஒரு கரம் வான் நோக்கி
ஆசீரை இரக்க, மறுகரம் மண் நோக்கி ஆசீரைப் பகிர
ஆடும் இன்பத் தாண்டவம் சூபி நடனம்

ஆணவத்தை களைந்து இருப்போடு ஒன்றாகும்
ஆன்மீக சாதனமாய் நடனம்-நீண்ட தொப்பி
ஆணவத்தின் கல்லறையையும், வெண்ணாடை
ஆணவத்தின் போர்வையையும் குறிக்க ஆடும் நடனம்
ஆழ்நிலைத் தியானமான வழிபாடாகும்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-14-12-2024*

The Sufi dance, often referred to as the **Sema** or **whirling dervishes**, holds deep spiritual significance within Sufism, a mystical branch of Islam. It is not merely a dance but a form of meditation and worship, designed to bring the practitioner closer to God. Here are some of the key aspects of its significance:

### 1. Connection to the Divine

- The spinning movements of the dervishes symbolize the movement of the cosmos and the journey of the soul towards union with the Divine.
- By losing themselves in the rhythm and motion, practitioners aim to transcend their ego and experience the presence of God.

### 2. Symbolism in Movement

- The arms of the dervish are often positioned with one hand pointing upward (toward the heavens) and the other hand downward (toward the earth). This posture represents receiving blessings from the Divine and distributing them to the earth.
- The continuous turning reflects the idea of surrendering to the cyclical nature of life and divine will.

### 3. State of Ecstasy (Wajd)

- The whirling dance is performed to music and poetry, often inspired by the works of mystics like **Rumi**. This creates a state of ecstasy or "wajd," in which the practitioner feels spiritually intoxicated and deeply connected to God.

### 4. Ritual Purity and Discipline

- The Sema ritual includes structured sequences and specific attire. For example:
  - The tall hat (sikke) represents the tombstone of the ego.
  - The white robe (tennure) represents the shroud of the ego.
- Before beginning the Sema, participants engage in purification practices, as the act requires mental and spiritual discipline.

### 5. Universal Unity

- Sufis believe that everything in the universe, from atoms to celestial bodies, is in constant motion. The Sufi dance is a way of aligning oneself with this universal rhythm, symbolizing unity with all creation.

### 6. Path to Selflessness

- The act of whirling induces a trance-like state, helping participants detach from worldly concerns and their own self-centered thoughts, leading to a state of humility and surrender.

The Sufi dance is more than a performance; it is a profound spiritual practice aimed at realizing love, unity, and the eternal presence of God. It is both an individual and collective expression of devotion, joy, and spiritual awakening.

சூ஁பி நடனத்திற்கு (சூ஁பி சுழலும் நடனம் அல்லது செமா) சூ஁பிசத்தில், அதாவது இஸ்லாமின் தியானத் தன்மை கொண்ட ஒரு பிரிவில், ஆழமான ஆன்மிக முக்கியத்துவம் உள்ளது. இது ஒரு சாதாரண நடனம் அல்ல, மாறாக தியானத்திற்கும் வழிபாட்டிற்கும் உரியதாகக் கருதப்படுகிறது. இது, வழிபாட்டு புரியாளர் (தர்வீஷ்) இறைவனிடம் நெருக்கமாக சேர உதவுகிறது. இதன் முக்கிய அம்சங்கள் பின்வருமாறு:

### 1. இறைவனுடன் இணைவு

- தர்வீஷ்களின் சுழலும் இயக்கங்கள் பிரபஞ்சத்தின் இயக்கத்தையும், ஆன்மாவின் இறைவனுடன் இணைந்த பயணத்தையும் குறிக்கின்றன.
- ரிதம் மற்றும் இயக்கத்தில் தங்களை இழந்து, தங்களின் அகத்தை (ஈகோ) வெற்றி கொண்டு, இறைவன் முன்னிலையில் இருப்பதை உணர முயல்கின்றனர்.

2. **இயக்கத்தின் அறிகுறிகள்**

- தர்வீஷின் கைகள், ஒன்று மேலே (வானத்தை நோக்கி) மற்றும் ஒன்று கீழே (பூமியை நோக்கி) இருக்கின்றன. இது, இறைவனிடமிருந்து ஆசீர்வாதங்களை பெறுவதையும், அவற்றை பூமிக்குப் பகிர்ந்துகொள்வதையும் குறிக்கிறது.
- தொடர்ந்து சுழல்வது வாழ்க்கையின் மற்றும் இறைவனின் சுழற்சியைக் கேட்பதையும், அதற்கு முழுமையாக ஒப்புதல் கொடுப்பதையும் குறிக்கிறது.

3. **ஆன்மிக ஏகதிபத்தியம் (வஜ்த்)**

- இந்த சுழலும் நடனம், அதிகமாக ரூமி போன்ற ஆன்மிகக் கவிஞர்களின் கவிதைகளின் இசையுடன் நடத்தப்படுகிறது. இது, ஆவிக்காக மேன்மையான சந்தோஷ நிலையையும் (வஜ்த்) உருவாக்குகிறது, அதில் இறைவனுடன் ஆழ்ந்த தொடர்பு உணரப்படுகிறது.

4. **சடங்கு தூய்மையும் ஒழுங்கும்**

- செமா சடங்கு குறிப்பிட்ட அணிவகுப்புகளையும், உடைகளையும் கொண்டுள்ளது. உதாரணமாக:
    - உயரமான தொப்பி (சிக்கே) அகத்தின் கல்லறையை குறிக்கிறது.
    - வெள்ளை உடை (தெனுரே) அகத்தின் கஃபனை குறிக்கிறது.
- செமாவை தொடங்குவதற்கு முன், பங்கேற்பாளர்கள் தங்களை சுத்தமாக்கும் செயல்களில் ஈடுபடுவர், ஏனெனில் இது மன மற்றும் ஆன்மிக கட்டுப்பாட்டைத் தேவைப்படுகிறது.

5. **உலகப் பரப்பின் ஒன்றிணைவு**

- சூஃபிகள், அணுக்களிலிருந்து விண்மீன் உடல்கள வரை பிரபஞ்சத்தின் எல்லா பொருள்களும் தொடர்ந்து இயக்கத்தில் உள்ளன என்று நம்புகிறார்கள். சூஃபி நடனம், இந்த பிரபஞ்ச ரிதமைப் பின்பற்றவும், எல்லா படைப்புகளுடனும் ஒன்றிணைவதைக் குறிக்கவும் வழிவகுக்கிறது.

6. **சுயநலமற்ற நிலையை அடைவது**

- சுழலும் செயல்பாடு ஒரு மயக்க நிலையை ஏற்படுத்துகிறது. இது பங்கேற்பாளர்களை உலகியல் கவலைகளிலிருந்து மற்றும் தங்கள் சுயநலக் கோட்பாடுகளில் இருந்து விலக செய்ய உதவுகிறது. இது பணிவையும் முழுமையான ஒப்படைவும் அடைவதற்கு வழிவகுக்கிறது.

சூஃபி நடனம் ஒரு சாதாரண நிகழ்ச்சி அல்ல, மாறாக, இது ஒரு ஆழ்ந்த ஆன்மிக சாதனையாகும். இது அன்பு, ஒற்றுமை மற்றும் இறைவனின் நிலையான இருப்பை உணர்வதற்கான ஒரு தனிப்பட்ட மற்றும் கூட்டு வெளிப்பாடாகும்.

# இசை ஞானி

---

நாத பிரம்மமாய், ஓங்கார நாதமாய்-அதிரும்
ஆதியின் வார்த்தை அனைத்தையும் படைத்திட
ஒரு கை ஓசை'' ஸென் விழித்திட-எங்கும் ஒலித்து
இன்பத்தை அள்ளிப் பொழிந்திடும் பிரபஞ்சகானம்

கைகொட்டி கும்மியாடும் கோபிகைகளாய்-
கோள்கள் கதிரவனைச் சுற்றி நடனமாட
சூரிய குடும்பத்தின் ஓயாத நடனம்
உன்னத கொண்டாட்டமானது







புள்ளினத்தின் மொழியும் இசை
பூ விரியும் ஓசையிலும் இசை
அண்டத்திலும் இசை-அதிரவைக்கும்
இடி, மின்னல் மழையிலும் இசை

ஆழ்கடலிலும் மௌனத்தின் இசை, அருவியிலும்,
அலைக்கரங்களிலும் மேளத்தின் இசை
நதியின் நடையிலும் மெட்டியொலியின் இசை
அசை வெங்கும் இசை-அதிர்வதெல்லாம் இசை

எங்கும் இசை எதிலும் இசை, இதயத்துடிப்பிலும் இசை
விடியலிலும் இசை, வீசு தென்றலிலும் இசை
புயலிலும், மழையிலும், மௌனத்திலும் இசை
வாழ்வே இசை, இசைக்கோலமாய்ப் பிரபஞ்சம்

வாழ்வே இசை, ஆதியின் வார்த்தையும் இசை
ஆனந்த சிவசக்தி நடனத்திலும் இசை
அதிர்விலும் இசை, உயிர் மூச்சிலும், பேச்சிலும் இசை
இசையின்றி ஏதுமில்லை இசை வடிவாய் இருப்பு-

இசை மேதை தான்சேனின் கானமழையில்
இசையும், மௌனமும் ஒன்றிணைந்து ஆடிப்பாடிக்களிக்க
ஒப்பில்லா தேவகானத்தில்-தர்பார் தன்னை மறந்து இலயிக்க
தூறலாய் தொடங்கி-தூவானமாய் வீசி கானமழை தொடர்ந்தது

மின்னல் ஒளிர்ந்து- இடியாய் முழங்கி-சீதளத்
தென்றலாய்த் தழுவி புயலாய்ச் சீறி, பெருமழையாய்
விரிந்து, பூவாய் மலர்ந்து புன்னகையாய் ஒளிர்ந்து
சுரங்களின் வானவில்லாய் மாறிய இசை

அலை ஓசையாய், ஆழ்கடலின் ஆனந்த
அமைதியாய்-பேரலையாய்-சிற்றலையாய்
குமுறலாய், ஆனந்தச் சினுங்கலாய்
அதன் எண்ணில்லாப் பரிமாணங்கள்

எழுந்தும் வீழ்ந்தும் இசையின் நடனங்கள், இசையும், மௌனமும்
இரண்டறக் கலந்திட பிறந்திடும் தேவகானம் எங்கும் ஒலித்திட
குயிலின் தவிப்பாய்-கிளியின் கெஞ்சலாய் இராகமாலிகையாய் மாறிட
வார்த்தை கடந்த மொழியில்-வானளாவிய பாவங்கள்,ராகங்கள், தாளங்கள்



இசை மழை ஓய-எங்கும் பேரமைதி நிலைக்க, இலயித்த மாமன்னர்
அக்பரும் உரைத்தார் எவரும் தான்சேன் இல்லத்தின்
அருகிலும், தொலைவிலும்-இசை மீட்கலாகாது, ஓசைகள்
எல்லாம் இசையல்ல, தான்சேனின் இருப்பும் இசையே

தான்சேனுடன் போட்டியிட வந்த இசை வல்லுனர்கள்
தந்தி அறுந்த வீணையாய் நாணி, தாளம் தப்பிய
பாடலாய் மாறிட, அக்பரின் தர்பாரில் ஈடு இணையில்லா
இசைச் சக்கரவர்த்தியாய் தான்சேன்

இசையே வேள்வியாக-வாழ்வே ஆகுதியாக, ஏழு ஸ்வரங்களில்
தம்மை தொலைத்து எட்டாம் சுரமாய் தம்மைப் படைத்து
பைத்தியம் என வசைமொழி கேட்ட பாய்ஜூ பாவ்ராவும்
அறியாத கானமாய், கேளாத சுரமாய் அங்கே வாழ்ந்தார்



தான்சேனை வெல்வதே தம் இலட்சியமாக
இசைக்கே வாழ்வை அர்ப்பணித்தவர்
தம் இசையும் முழுமை பெற-தான்சேனின்
குரு ஹரிதாஸிடம் சீடனாய்ச் சரணடைந்தார்

இசை கேட்டு குருவின் இதயம் அசைந்தாட, புத்தம்
புதுமலராய் பூத்தாட மகத்தான இசை உனது-என்
இசைப் பூங்காவில் தான்சேன்போல் அரிய
தாமரை பூப்பது ஆனந்தமளிக்கின்றது



வெல்ல வேண்டும் என்ற எண்ணம்-உன்னைத் தோற்கடிக்கின்றது-
இசையாய் உன் இருப்பு மாறத் தடையாகின்றது
உன்னிடம் கலைத்திறன் உண்டு-ஆனால் இசைத்திறன் இல்லை
யாரையும் தோற்கடிக்கும் ஆணவம் தான்சேனிடம் இல்லை
அதனால் ஆணவமழிந்த அவர் இருப்பே இசையானது

குரு மொழியை இறை மொழியாய் செவி மடுத்து
மன உறுதியுடன் ஊர் திரும்பிய சீடன்

காலங்கள் கடந்து போயின, மெய்யின் கோலங்கள் மாறிப்போயிட
கால்கள் மரத்துப்போய்., கிட்டிய தொலைவில் உள்ள
கிருஷ்ணன் கோயில் எட்டாத் தொலைவாகிட
கிருஷ்ண பக்தர் ஹரிதாஸை முதுமையும், வாதமும் வாட்டியது

நாளும் உன்னைக் கண்டு தொழாமல் உண்ணேன்,
குடியேன் என வாழ்ந்த இசை மேதை படுக்கையில் விழுந்திட
வாழும் இசை ஊமையானது, உயிர்ச் சுவாசமின்றி, ஒலித்த
புல்லாங்குழல் ஊமையாய் மாறிப் புல்லாய் போனது

வண்ணமும் உணவின்றி வாடிக் கருக்க-எண்ணமெல்லாம்
கிருஷ்ணா, கிருஷ்ணா என்றே இறை புகழ்பாடித் துதிக்க
அன்னமும், மருந்தும் கசக்க, திண்ணமாய்க் கண்ணன்
குணமளிப்பான்-அன்றே வண்ணமலராய் என்னைத் தந்து
உன்னைத் தொழுவேன் கண்ணா, இதயம் தொழுதது

குருவின் வாதையறிந்து-பதறி வந்த பாய்ஜூ பாவ்ரா-
கருணை செய்வாய் கிருஷ்ணா என்றே, உள்ளம் உருகிட
கண்ணில் நீர் எழுதிக் கண்ணனுக்கு கான அபிஷேகம் தொடங்கிட
காற்றில் எழுந்த அமிர்தகானம்- குருவையும் தொட்ட கானாமிருதம்

காற்றினிலே வரும் கீதம்-கண் மலர்ந்த குருவுக்குத் தேவாமிருதமாக
மெய் சிலிர்த்து, இதயம் விம்ம கண்கள் ஆனந்த கண்ணீர் சொரிய
கிருஷ்ணா! கிருஷ்ணா! என வாய் உருக தெய்வத்தை தொட்ட தேவராகம்
திருவடி தொழுது நின்னடி சரணம் என்ற சரணம்

நடந்து வந்த கால்களும், வாதத்தால் நொந்து முடமாயின
கண்டு மகிழ்ந்த விழிகளும் காணாமல் கண்ணீரில் மூழ்கின
இசைத்து உன்னைத் துதித்த இதழ்களும் ஊமையாகின-
தள்ளாடும் மெய்யிலோ தந்தி அறுந்த வீணையின் நாதம்
உனக்காய் பாடிய வாயிலோ ஒற்றைக்குயிலின் கானம்

பக்தனின் கால்களை முடமாக்கிப் பகவானே -உன்னை
மறைத்தாயோ?, பதறித் துடித்தும் உன்னைக் காண வழியன்றி
உன் அருளை நீயும் மறைத்தாயோ? தாயைக் காணாத சேயாய்
கரைகின்றேன் தெய்வமே அருள் புரிவாய்

கிருஷ்ணா!. கிருஷ்ணா, ஒலியாய், ஓசையாய், இசையாய்
இதயராகமாய் என்னுள் நீயே கண்ணா, உன்னைக்
காணாத கண்கள், உதயம் காணாத தாமரையாய் தவிக்க
உனைத் துதிக்காமல் என் நாவும், வெற்றுப் புல்லாங்குழலாய்
புழுதியில் கிடக்க,துடிக்கும் என் இதயத்துள்ளும்,
விரிந்து சுருங்கும் சுவாசத்துள்ளும்
உலாவிடும் உயிர்க்காற்று நீயே ஐயா

முடமான கால்கள் என் நாவை முடமாக்கவில்லை-நடமாட
முடியாமல் உன்தன் கோயில் படி ஏற முடியவில்லை
கானமில்லா வெற்றுக்குழல் என்னுள் கானமிசைக்கும் உயிர்க்காற்றே-
-உன்தன் வேயங்குழலாய் என்னை மீண்டும் மாற்றி விடு
கானக்குயிலாய் நான் பாட என்னைத் தொட்டு குணமாக்கி விடு

இசையும் குழல் வழி எழுந்தாட
விழிகளும் கண்ணீரில் நீராடி கண்ணன் துதிபாட
உள்ளமும் உருகி இசையாய் வழிந்தோட
இசை கேட்டு அசையும் உலகும் தன்னை மறந்தாட
ஆடியபாதமும் ஆனந்தத்தால் கூத்தாட-பக்தனின்
கால்கள் குணமாக கண்ணனும் சேர்ந்தே இசைத்தான்

பூபாளமாய் தொடங்கி, கல்யாணி, காம்போதி கடந்து
சஹானாவாய் இரந்து, மோகனமாய், தர்பாராய் எழுந்து
சாமாவாய் கெஞ்சி ஹிந்தோளமாய் பணிந்து
காபியாய் நெஞ்சை வருடி-அமிர்தவர்ஷினியாய் பொழிந்து
புன்னகவராளியின் தாளம் ஒலிக்க தொடர்ந்த கானமழை

காற்றினில் வந்த கீதம் காதுகளில் தேனாய்ப் பாய,
மரத்த கால்கள் மழைபட்ட பயிராய் உயிர்த்தெழ,
மகிழ்வோடு எழுந்து நடந்தவர்-
கண்டார் கண்ணில் நீர் வடியக’
கான மழை பொழியும்
பக்தன் பாய்ஜூ பாவ்ராவைக் கண்டார்

நெஞ்சுருகி, விழிகளில் நீர் தூமிக்க இதயத்தில் அன்பும்,
பெருமிதம் பொங்க, பொங்கும் பூம்புனலாய் உன் இசை
புனிதமான உன் இசை என்னைக் குணமாக்கிற்று
தான்சேனுக்கு இணையான ஒரே இசைஞானி நீ தான்

இனி நீ தான்சேனுடன் போட்டியிடலாம்
மனதில் ஆசைகள் இல்லை
வெல்லவேண்டும் என்ற ஆணவம் இல்லை
போட்டியிட எல்லாத் தகுதியும் உன்னிடம்

என் கால்களைக் குணமாக்கிய
உன் இசை பூரணமானது, தெய்வீகமானது.
போட்டியிட நீயே தகுதியானவன்

இசைக்காய் என்னை நான் இழந்து விட்டேன்
போட்டி, வெற்றி, புகழ் குழந்தைத்தனமான
ஆசைகள் என்னிடமிருந்து மறைந்து விட்டன
நான் தோற்கடிக்கப்பட்டேன் என்பது உண்மை



இசைக்கே அர்ப்பணமான எளியவன்
உள்ளத்தில் ஆணவமில்லை, போட்டியும், இல்லை
புகழ் தேடும் எண்ணமும் இல்லை-இசை மேதை
தான்சேனை மறந்துவிட்டேன்-

இசையானேன் ,ஆனந்த லாகிரியானேன்
வேனுகோபாலனின் வேயங்குழலானேன்,
இசைப்பது அவனே-அவனே இசைஞானி
நானோ வெற்றுப் புல்லாங்குழல்
பணிவோடு மொழிந்தார் பாய்ஜூ பாவ்ரா

மகிழ்ந்த குரு பெருமிதமாய் உரைத்தார்
பாய்ஜூ பாவ்ரா நீ பைத்தியம்
என்பதை எண்பித்துவிட்டாய்
தான்சேனை கடந்து உயர்ந்து விட்டாய்

போட்டியல்ல இசை, புனிதமான தியானம்,
புரிந்துகொண்டாய் , இசையைத் தியானமாக்கி ,
ஆணவம் துறந்து அரிய இசை ஞானியானாய்

இசை வாழும் காலமெல்லாம் நின் புகழ் வாழும்
இசை ஞானியை வாழ்த்தினார் குரு
புன்னகை பூத்தான் வேனுகோபாலன்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-28.07.2023

# இசை ஞானி ஹரிதாஸ்





மாமன்னர் அக்பரின் நவரெத்தினங்களில்
ஒருவராய் இசை மேதை தான்சேன்
மன்னருக்கு இசைமீது அளவில்லாத ஈர்ப்பு
இசை மேதை மீதோ பெரும் பற்று

இசை ஞானி தன் சிதாரை மீட்ட,
ஓய்விலிருக்கும் மற்றோர் சிதார்
அதே சுருதியில் இசை எழுப்புவதை
கேள்வியுற்ற மன்னர் வினவினார்

நான் கேள்விப்பட்டது உண்மைதானா
அப்படி இசைமீட்க வல்லவர் உண்டோ ?
கூறுங்கள், கேட்க ஆவலாயிருக்கிறன்
அவர் இசையை இரசிக்க விரும்புகிறேன்





மன்னரே பல முறை நீங்கள் வினவியும்
உரிய பதிலைக் கூறாது மழுப்பி விட்டேன்
இனியும் மறைப்பதில் பயனில்லை
ஒருவரை எனக்குத் தெரியும்
அவர்தான் என் குரு ஹரிதாஸ்

நானோ பொன்னுக்கும், புகழுக்கும்
இசைபாடும் ஏழை, பிச்சைக்காரன்
அவரோ இசை ஞானி-பொன், புகழை
தூசென உதறித் தள்ளிய மா மேதை

மன்னர் அழைத்தாலும் அவர் வரமாட்டார்
பிறர் புகழ இசை மீட்கமாட்டார்-தாகமெடுத்தவர்
நீர் நிலை தேடுவதுபோல் நாம்தான் செல்ல வேண்டும்,
நல்நாதம் கேட்க பாக்கியம் செய்திருக்க வேண்டும்

நாளும் அதிகாலையில் மூன்று மணிக்கு
என் குரு இறைவனைப் போற்றிப் பாடுவார்
அது இறை புகழ்ச்சி, மனிதரைப் புகழ்ந்து
பாடாத மகானின் உள்ளத்தின் எழுச்சி

குரு வசிக்கும் யமுனா நதிக்கரையை
இருவரும் அடைந்து குருவின் குடிலுக்கு
அருகில் மறைந்து காத்திருந்தார்
அதிகாலைப் பொழுதில் எழுந்த அற்புத கானம்



வயது முதிர்ந்த முதியவர் சிதாரோடு குடிலுக்கு
முன்னிருந்த இருக்கையில் அமர்ந்து வாசிக்க
-காதுவழிப் பாய்ந்த கானமிருதம், வானையும்,
வையகத்தையும் ஆட்டுவித்த தேவகானம்

திடீரென அக்பர் ஓரமாய் வைத்திருந்த
சிதார் அதே சுருதியில் இசை மீட்க
உள்ளம் குளிர, உரோமம் சிலிர்க்க
விழிகளில் நீர் அரும்ப வியந்த மன்னர்



தம்மை மறந்த பாவம் -தந்தையை
அழைக்கும் குழந்தையின் சுபாவம்
தந்தையும் மகனுமாய் உறவு-இசையோ
இருப்பை ஈர்க்கும் காந்தப் புலம்

நிலவும் நின்று கேட்க, சீதளத் தென்றலும்
பாசமாய்த் தழுவி மேனி சிலிர்க்க
பங்கயம் இதழ் அவிழ்க, பரிமளம் நாற,
புள்ளினம் பூபாளம் பாட பூத்த பொழுது

இப்படியும் ஓர் அதிசயத்தை நான்
இதுவரை காணவில்லை, இதுபோல்
ஒரு அமிர்தகானத்தை என் செவிகள்
கேட்டதில்லை, இதயம் குளிர்ந்ததில்லை

அரண்மனைக்குத் திரும்பிய அக்பர் உரைத்தார்
உம்மை விடச் சிறந்த இசைக் கலைஞன்
இல்லையென எண்ணியிருந்தேன்-ஆனால்
உம் குருவுக்கு முன்னால் நீரோ ஒன்றுமில்லை

மலையாய் அந்த மகான், மடுவாய் நீர்,
ஓய்ந்திருந்த என் சிதாரை அவர் இசை
மீட்கமுடியுமென்றால்-உமக்கும் அவருக்கும்
இடையில் எதுதான் சாத்தியமில்லை

அதிசயங்கள் சாத்தியமாக, என் அரச சபையையும்
என்னையும் மறந்து விடுங்கள், வயதான குருவுக்கு
பணி செய்து அவர் பக்கத்தில் இருங்கள், அந்த இசை
உங்களை நெருப்பாக்கட்டும், புடமிடட்டும்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-14-12-2024*

# இசைப் பிரியன்–மா இரசிகன்

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -



லக்னோவை ஆண்ட பாதுஷா
பெரும் இசைப் பிரியன், கலா இரசிகன்
நாளும் அவையில் ஒலிக்கும் இசை விருந்து
அவையினருக்கோ சஞ்சீவினியான மருந்து




இசையில் தன்னை இழந்த மன்னன்
நாளும் புதிதாய் இசை விருந்தைச் சுவைத்திட
ஆவல் கொண்ட இரசிகன், வினவினான்-யாம் கேட்டு
இரசிக்க ஒப்பற்ற இசைக் கலைஞர் யாரும் உளரோ?

என் அவை கேட்காத இசை விருந்தை
அளிக்க வல்ல கலைஞனைத் தேடுகிறேன்
கண்டால் கூறுங்கள்- மந்திரி எழுந்து
உரைத்தார் மன்னா ஒருவர் உள்ளார்

ஆனால் நிபந்தனை விதிக்கின்றார்
தன் கச்சேரியில் இரசிகர்களாய் கலந்திடும்
யாரேனும் தன் இசை கேட்டு தலை அசைத்தால்
தலை வெட்டப்பட வேுண்டும் இதுதான் நிபந்தனை

அச்சுறுத்தும், ஆச்சரியமான நிபந்தனை, மந்திரியாரே
பொன் பொருள் வழங்கி கௌரவமாய் அழைத்து வாருங்கள்,
கலைஞன் அவர் இசையை நான் கேட்கவேண்டும்,
என்னோடு சபையினரும் இரசிக்கவேண்டும்

பொன் பொருளுக்காய்ப் பாடும் பாடகன்
அல்ல அவர், பெரும் இசை மேதை
அப்படியே ஆகட்டும் அவை நிரம்பிட
கம்பீரமாய் நடந்து வந்த இசை ஞானி



அவையே அரங்கமாக இசைக் கச்சேரி,
அரசே நம் நாட்டை ஆக்கிரமிக்க வெள்ளையர்
படை வருகின்றது கேட்டும் கலங்காமல்
மன்னன் அளித்த பதிலோ வியப்பானது

நாடு வேண்டுமென்றால் எடுத்துக் கொள்ளட்டும்
ஏன் வீணாய் இரத்தம் சிந்தும் போர்
வருபவரை விருந்தாளியாய் போற்றுங்கள்
கச்சேரி முடிந்தபின் நான் கலந்துரையாடுவேன்
கட்டளையிட்ட மன்னன் மகா இரசிகன்



அவையினருக்கு நிபந்தனையை உரைத்த
மன்னன், அசையும் தலைகள் உருளும்
இசையோ உங்களை ஆட்டுவிக்கும்
இரசியுங்கள் களிகூருங்கள் உவப்போடு

சபையினரைக் கவனிக்க உருவிய வாளோடு
படையினர், உற்சவமாய்த் தொடங்கிய
கச்சேரி உச்சத்தில் இசை மழை
தேன் மழையில் நனைந்த சபை

எங்கும் அமைதி, ஆழ்ந்த நிசப்தம்
சிதாரில் இசை பிறக்க, குழந்தையாய் தவழந்து,
பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை,
தெரிவை ஆடிய நடனம் ஆரோகணம்,அவரோகணம்

மோகனம், காம்போதி, தோடி,
சிவரஞ்சனி,ஹனுமத்தோடி,பூபாளம் வருட
உணர்வைத் தொட்ட இசையில்
இதயம் துள்ள ராகத்தின் சரங்கள், ரசங்கள்

தென்றல் தவழ்ந்திட, சீதளம் வருடிச் செல்ல
நாதத்தோடு விழும் அருவி, ராகத்தோடு இசை பாடும்
குருவி, தென்றல் தாலாட்டும் இலைகளின் சலசலப்பில்
இசை, துள்ளி நடைபோடும் நதியில் ஆனந்த ஓசை

சித்தாரின் தந்திகளை வருடிய விரல்கள்
எழுந்த இசையோ மனதை மயக்கிடும்
நாத சுரங்கள், இதயத்தை ஆட்கொண்ட
மந்திரங்கள், சுவாசத்திலும் ஆலாபனைகள

இதயத்தை தழுவிச் சென்றது தென்றலா?
வருடிச் செல்வது மேகமே, மயில் பீலீயா,?
செவி கேட்பது கானக்குயிலின் கானமோ?
மனதை ஆட்டுவிப்பது கலாப மயிலின் நாட்டியமா?



கேட்கச் செவியுள்ளோர் கேட்டு இரசிக்க
இருப்போ நாதம், எங்கும் ஒலிப்பதும் நாதம்
இயற்கையின் அசைவில் நாதம்,
இசையின் மொழியே நாதம்

ராகம், தாளம் பல்லவியாய் நாதம் மௌனமும்,
ஓசையுமான அரிய கலவை நாதம்,
உதயம் நாதம், அஸ்தமனம் நாதம்,
ஓங்கார நாதமாய், நாத சொருபமாய் இறைவன்

அருவி வீழ்ந்திடும் இனிய ஓசை
குருவிகள் குதூகலிக்க தென்றலின் ஆடும்
நெற் கதிர்கள், தெள்ளிய நீரோடையில் மலரும்
செம்பங்கயங்கள், பாயும் தவளை, பாடும் வண்டு

செவி வழி நுழைந்து சிந்தையைக் குளிர்வித்த
அமுதாய் நாதம், உள்ளம் குளிர உரோமம் சிலிர்க்க,
கண்களில் நீர் அரும்ப, கட்டுண்டு கிடந்த அவை
ஆட்டுவித்த இசைச் சித்தனோ மாமேதை

இசை கேட்டு புவி அசைந்தாட
இதயங்கள் தம்மை மறந்து இலயித்து
பரவசத்தில் பூத்தாட, கடல் அலைகள்
கால்களை வருடிச் செல்ல ஓய்ந்த இசை



மகுடமும் ஆட மன்னவன் மனம் ஆட
தலையாட, ஆடிய இசை, ஆட்டுவிக்க
தம்மை மறந்து அசைந்த தலைகள்
இசைக்கு தலைவணங்கிய இதயங்கள்

மன்னன் தலையோடு உடலும் ஆட
இதயம் கூத்தாட, ஆயிரம் தாமரைகள்
பூத்தாட கேட்ட இசை, பிறப்பின் பலன் இன்று
பெற்றேன் உவகையால் பூரித்த இரசிகன்

ஒப்பற்ற மேதை மன்னன் மனம் வியக்க
அவை வியந்து பாராட்ட,
அசையாத இசை ஞானி, அவையை
நோக்கிய விழிகளிலோ கேள்வி



அசைந்த தலைகள் எத்தனை வினவிட,
பன்னிரெண்டு பதிலளித்த படைத் தலைவன்
நானும் ஆடினேன் என் தலையும் ஆடியது
கலங்கிய இதயத்தோடு தவித்த மன்னன்

தம்முயிரையும் மறந்து, என் நிபந்தனையை
புறந்தள்ளிய மகா இரசிகர்கள் இவர்கள் மட்டுமே
மன்னா என் இசை கேட்கும் தகுதி இவர்களுக்கே
மற்றவர் கோழைகளே, தம்முயிர் காத்த மூடர்களே

இரசிகர்களைத் தெரிவு செய்ய இப்படியும்
ஓர் உபாயமா?, வியந்து மெச்சிய மன்னன்
மகிழ்ந்தான், உயிரை பொருட்படுத்தாத
ஒப்பற்ற இரசிகர்களை கண்டு பூரித்தான்




வைரத்தை வைர வியாபாரியே அறிவான்
வைரத்தின் பெறுமதி அவனுக்கே தெரியும்
மற்றவர் கண்ணாடிக் கல் என்பார்
வீண் கதை பேசிப் பழிப்பார், இகழ்வார்

மண்ணாளும் நானோ குறுநில மன்னவன்,
இசை உலகாளும் நீங்களோ இசைக் சக்கரவர்த்தி
இசை ஞானியைப் போற்றி அன்போடு அணைத்து
வாழ்த்திய மன்னனோ மகா ரசிகன்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-*

**ராகங்கள்** என்பது இந்திய சங்கீதத்தின் முக்கிய அச்சான ஒலிச் செயற்பாடுகளுள் ஒன்றாகும். ராகம் என்பது இசையின் ஒரு அமைப்பு அல்லது "மூடல்" (melody) ஆகும், இது தனித்துவமான உணர்வுகளை அல்லது மனநிலைகளை வெளிப்படுத்தும். ஒவ்வொரு ராகத்திற்கும் தன் தனித்துவமான குறிப்புகள், நியமங்கள், மற்றும் உணர்வுகளைக் கொண்டுள்ளது.

### ராகங்களின் முக்கிய அம்சங்கள்

1. **அரோஹணம் (ஏறுதல்)**: மேலே செல்லும் குறியீடுகள் (சரிகமபதநி).
2. **அவரோஹணம் (இறக்கம்)**: கீழே செல்லும் குறியீடுகள் (நிதபமகரிச).
3. **ஜீவனசுரங்கள்**: அந்த ராகத்தில் உயிரை தரும் முக்கிய சரங்கள்.
4. **விசேஷ தர்மங்கள்**: ராகத்தின் தனித்துவமான விதிகள்.
5. **உணர்வுகள்**: ஒவ்வொரு ராகமும் ஒரு உணர்வை அல்லது "ரசம்"ஐ வெளிப்படுத்தும் (சந்தோஷம், சோகம், அமைதி).

---

### சில பிரபலமான ராகங்கள் மற்றும் அவற்றின் பொருள்

1. **மோகனம்**
   - **அருகுமுறை**: சரிகபதச | ஸநபமகரி
   - **பொருள்**: மகிழ்ச்சி, சாந்தம் மற்றும் அமைதியை வெளிப்படுத்தும்.
   - இது ஆரம்ப நிலை மாணவர்களுக்கு பயிற்சிக்காக பயன்படுத்தப்படும் எளிய ராகமாகும்.
2. **காம்போதி**
   - **அருகுமுறை**: ஸ ரி க ம ப த ந ஸ் | ஸ ந ப ம க ரி ஸ
   - **பொருள்**: சக்தி மற்றும் தைரியத்தை வெளிப்படுத்தும்.
   - இது கல்யாண பாடல்களிலும், தெய்வீகக் கீர்த்தனைகளிலும் காணப்படும்.
3. **தோடி**
   - **அருகுமுறை**: ஸ ரி க1 ம ப த ந1 ஸ் | ஸ ந1 த ப ம க1 ரி ஸ
   - **பொருள்**: ஏக்கம், உணர்ச்சி மிக்க சோக நிலையை வெளிப்படுத்தும்.
   - இது மிகவும் பரந்த அமைப்புகளுக்கு உகந்ததாக கருதப்படுகிறது.

4. **ஷிவரஞ்சனி**
    - **அருகுமுறை**: ஸ ரி க ம ப த ந ஸ்
    - **பொருள்**: சோகம் மற்றும் அமைதியை வெளிப்படுத்தும்.
    - திரைப்படப் பாடல்களிலும், கருணையை வெளிப்படுத்தும் பாடல்களிலும் பயன்படுத்தப்படுகிறது.
5. **ஹனுமத் தோடி**
    - **அருகுமுறை**: ஸ ரி க1 ம ப த1 ந ஸ்
    - **பொருள்**: பாசம், தியானம் மற்றும் சமாதானத்தை வெளிப்படுத்தும்.
    - இது தெய்வீக ஸ்லோகங்களில் பயன்படுத்தப்படும் ராகமாகும்.

---

### ராகத்தின் முக்கியத்துவம்

ராகம், இசையின் நெஞ்சுரத்தைப் போன்றது. அது மட்டும் தனியாக ஒரு பாடல் போல அமையாது; அது பாடலுக்கான அடிப்படையை உருவாக்கும். ஒவ்வொரு ராகத்துக்கும் தத்தம் உணர்வுகளை உண்டாக்கும் சக்தி இருப்பதால், அது மனதைக் கவரும் இசையின் பிரதான காரணமாக பார்க்கப்படுகிறது.

**இசை** என்பது மனித உணர்வுகளைக் குறிப்பிட்ட விதமான ஒழுங்கு முறையில் வெளிப்படுத்தும் கலைவகை ஆகும். இது குறிப்பாக மெல்லிசை, ராகம், தாளம், ரிதம், மற்றும் ஒலிகளின் சிநேக புனைவின் மூலம் உருவாக்கப்படும்.

இசையின் முக்கிய அம்சங்கள்:

1. **ராகம்**: குறிப்பிட்ட நபத்தின் உணர்வுகளைப் பிரதிபலிக்கின்ற ஒலிவினை அமைப்பு.
2. **தாளம்**: இசையின் ஓட்டத்தை அமைக்கும் ஒரு முறை.
3. **சொற்கள்**: பாடலின் கருத்தையும் மையத்தையும் உருவாக்கும் வார்த்தைகள்.
4. **அழகிய ஒலிகள்**: மனதை உருக வைக்கும் அல்லது உற்சாகப்படுத்தும் ஒலி உருவாக்கம்.

இசை மனிதன் மட்டுமல்லாது அனைத்து உயிரினங்களுக்கும் ஆழமான தொடர்பு கொண்டது. இது மகிழ்ச்சி, சோகம், அமைதி, உற்சாகம் போன்ற பல உணர்வுகளை உண்டாக்குகிறது. கலாச்சாரங்கள் மற்றும் சமயங்கள் மூலம் இசைக்கு தனித்துவமான உருவாக்கங்கள் காணப்படுகின்றன.